உ

# ஸ்ரீ சாரதா நவராத்திரி பூஜை

## நவராத்திரியில் — மங்கையர் பங்கு



ஸ்ரீ வித்யா உபாஸகர்—

ஜோதிஷம் மாயூரம் வைத்யநாதம்

உ

# ஸ்ரீ சாரதா நவராத்திரி பூஜை

## நவராத்திரியில் — மங்கையர் பங்கு

ஸ்ரீ வித்யா உபாஸகர்—

ஜோதிஷம் மாயூரம் வைத்யநாதம்

ஸித்தார்த்த வருஷம் புரட்டாசி மாதம் 5-ம் தேதி (21-9-1979) வெள்ளிக்கிழமை நவராத்திரி கொலுவைத்து சனிக்கிழமையிலிருந்து பூஜை ஆரம்பமாகிறது. 30-9-79 வரை பூஜையை தொடர்ந்து அன்று ஸ்ரீ ஸரஸ்வதி பூஜை யுடன் நிறைவு பெறுகிறது. மறுநாள் விஜயதசமியுடன் நவராத்திரி விழா நிறைவு பெறுகிறது. கிடைப்பதற்கரிய இந்நாட்களில் பெண்கள் ஒவ்வொருவரும் காலையில் 5 மணியளவில் எழுந்து குளித்து, குல ஆசாரப்படி உடுத்தி, 5 முக குத்துவிளக்கை சுக்ரகிரக கோல மிட்டு அதன்மேல் பித்தளை அல்லது வெள்ளித் தட்டிலோ அரிசி பரப்பி ஒரு முழு ருபாய் நாணயத்தை அதில் வைத்து அதன் மேல் குத்துவிளக்கை முதல் முகம் கிழக்கு முகமாக இருக்கும்படி வைத்து எண்ணெ திரியிட்டு கீழ்க்கண்ட அபிராமி அந்தாதி பாடலை சொல்லி விளக் கேற்றவும்.

"அன்றே தடுத்தென்னை ஆண்டு கொண்டாய் கொண்ட
தல்ல வென்மை
நன்றே உனக்கினி நான் என் செயினும் நடுக்கடலுள்
சென்றே விழினும் கரையேற்றுகை நின் திருவுளமே
ஒன்றே, பலவுருவே அருவே என் உமையவளே"

பின்பு முதல்நாள் (22-9-1979) சனிக்கிழமை மன நிம்மதி வேண்டுவோர் அரளி புஷ்பத்தினால் அர்ச்சனையும்,

23-9-1979—இரண்டாம் நாள் ஞாயிற்றுக்கிழமை காரியங்கள் கைகூடுவதற்காக வெண்தாமரை புஷ்பத்தினுல் அர்ச்சனையும்.

24-9-1979—3ம் நாள் திங்கட்கிழமை செயலில் வெற்றி பெற துளசி தளத்தினுலும்.

25-9-1979—4-ம் நாள் செவ்வாய்க்கிழமை உடலாரோக்யம் பெற செம்பருத்தி புஷ்பத்தினுலும்

26-9-1979—5-ம் நாள் புதன்கிழமை தத்தம் தொழிலும், வியாபாரமும் செழித்து வளர ரோஜா புஷ்பத்தினுலும்

27-9-1979—6-ம் நாள் வியாழக்கிழமை விவாகமாக வேண்டிய கன்யைகளுக்கு மணநாள் கூடிவர மல்லிகை புஷ்பத்தினுலும்

28-9-1979—7-ம் நாள் வெள்ளிக்கிழமை வம்ச வளர்ச்சிக்கும், தாம்பத்ய உறவு வலுப்படவும், நல்ல கல்வி வரவும் ஜாதி புஷ்பத்தினுலும்

29-9-1979—8-ம் நாள் சனிக்கிழமை எண்ணங்கள் ஈடேறவும், உத்யோக லாபம், கிரகலாபம் பெறவும் சங்கு புஷ்பத்தினுலும்

30-9-1979—9-ம் நாள் ஞாயிற்றுக்கிழமை சகல காரியங்களும் வெற்றி பெறவும், போட்டி, பந்தயங்களில் வெற்றி பெறவும், தனலாபம் கிடைக்கவும் பாரிஜாதம், முல்லே, தாமரை, நில சம்பங்கி, மருக்கொழுந்து போன்ற புஷ்பங்களே கதம்பமாக ஸ்ரீ துர்க்கா அஷ்டோத்திரத்தினுல் அல்லது அபிராபி அந்தாதியினுல் அர்ச்சனே செய்யவும். அர்ச்சனே முடிந்தபின் பால் பாயசம், உளுந்து வடை, 4 வெற்றிலே, 4 பாக்கு, 4 மஞ்சள், 4 பழம், ஒரு உடைத்த தேங்காய், பசும் பால் வைத்து நிவேதனம் செய்யவும். பின்பு கீழ்க்கண்ட அபிராமி அந்தாதி பாடலே படித்து விட்டு 16 நமஸ்காரங்கள் செய்யவும். நமஸ்காரம் முடிந்தவுடன் கற்பூர தீபம் ஏற்றி,

''ஸர்வ மங்கள மாங்கல்யே சிவே ஸர்வார்த்தஸாதகே
சரண்யே த்ரயம்பகே தேவி நாராயணி நமோஸ்துதே''

என்று சொல்லி வலமிருந்து இடமாக மூன்று முறை காட்டவும், பின்பு ஆரத்தி எடுத்து பசும்பாலினுல் விளக்கின் அடியில் தெளித்து தானே அணேயும் வரை விட்டு விடவும்.

# ஸ்ரீ துர்க்கா அஷ்டோத்திரம்

ஓம் தேவ்யை நம :
,, துர்காயை நம :
,, த்ரிபுவநேஸ்வர்யை நம :
,, யசோதாகர்பஸம்பூதாயை நம :
,, நாராயணவரப்ரியாயை நம :
,, நந்தகோபகுலஜாதாயை நம :
,, மங்கல்யாயை நம :
,, குலவர்த்தின்யை நம :
,, கம்ஸவித்ராவணகர்யை நம :
,, அஸுரக்ஷயங்கர்யை நம :
,, சிலாதடவிநிக்ஷிப்தாயை நம :
,, ஆகாசகாமின்யை நம :
,, வாஸுதேவபகின்யை நம :
,, திவ்யமால்ய விபூஷிதாயை நம :
,, திவ்யாம்பரதராயை நம :
,, கட்ககேடதாரிண்யை நம :
,, சிவாயை நம :
,, பாபதாரிண்யை நம :
,, வரதாயை நம :
,, க்ருஷ்ணுயை நம :
,, குமார்யை நம :
,, ப்ரஹ்மசாரிண்யை நம :
,, பாலார்க்கஸத்ருஸாகராயை நம :
,, பூர்ணசந்த்ரநிபானனுயை நம :
,, சதுர்புஜாயை நம :
,, சதுர்வக்த்ராயை நம :
,, பீநஸ்ரோணிபயோதராயை நம :
,, மயூரபிச்சவலயாய்யை நம :
,, கேயூராங்கததாரிண்யை நம :
,, க்ருஷ்ணச்சவிஸமாயை நம :
,, க்ருஷ்ணுயை நம :
,, ஸங்கர்ஷணஸமாநநாயை நம :
,, இந்த்ரத்வஜஸமபாஹுதாரிண்யை நம :
,, பாத்ரதாரிண்யை நம :
,, பங்கஜதாரிண்யை நம :
,, கண்டாதாரிண்யை நம :
,, பாசதாரிண்யை நம :
,, தனுர்தாரிண்யை நம :

ஓம் மஹாசக்ரதாரிண்யை நம :
,, விவிதாயுததராயை நம :
,, குண்டலபூர்ணகர்ணவிபூஷிதாயை நம :
,, சந்த்ரவிஸ்பர்திமுகவிராஜிதாயை நம :
,, முகுடவிராஜிதாயை நம :
,, சிகிபிச்சத்வஜவிராஜிதாயை நம :
,, கௌமார வ்ரததராயை நம :
,, த்ரிதவபாவயித்ர்யை நம :
,, த்ரிதச பூஜிதாயை நம :
,, த்ரைலோக்ய ரக்ஷிண்யை நம :
,, மஹிஷாஸுர நாசின்யை நம :
,, ப்ரஸன்னுயை நம :
,, ஸுரச்ரேஷ்டாயை நம :
,, சிவாயை நம :
,, ஜயாயை நம :
,, விஜயாயை நம :
,, ஸங்க்ராம ஜயப்ரதாயை நம :
,, வரதாயை நம :
,, விந்த்யவாஸின்யை நம :
,, காள்யை நம :
,, காள்யை நம :
,, மஹா காள்யை நம :
,, ஸீதுப்ரியாயை நம :
,, மாம்ஸ ப்ரியாயை நம :
,, பசுப்ரியாயை நம :
,, பூதாநுஸ்ருதாயை நம :
,, வரதாயை நம :
,, காமசாரிண்யை நம :
,, பாபஹரிண்யை நம :
,, கீர்த்யை நம :
,, ச்ரியை நம :
,, த்ருத்யை நம :
,, ஸித்யை நம :
,, ஹ்ரியை நம :
,, வித்யாயை நம :
,, ஸந்தத்யை நம :
,, மத்யை நம :
,, ஸந்த்யாயை நம :
,, ராத்ர்யை நம :

ஓம் ப்ரபாயை நம :
,, நித்ராயை நம :
,, ஜ்யோத்ஸ்நாயை நம :
,, காந்த்யை நம :
,, க்ஷமாயை நம :
,, தயாயை நம :
,, பந்த நாசின்யை நம :
,, மோஹ நாசின்யை நம :
,, புத்ராப ம்ருத்யு நாசின்யை நம :
,, தநக்ஷய நாசின்யை நம :
,, வ்யாதி நாசின்யை நம :
,, ம்ருத்யு நாசின்யை நம :
,, பய நாசின்யை நம :
,, துர்காயை நம :
,, சரண்யாயை நம :
,, பக்த வத்ஸலாயை நம :
,, ஸௌபாக்யதாயை நம :
,, ஆரோக்யதாயை நம :
,, ராஜ்யதாயை நம :
,, ஆயுர்தாயை நம :
,, வபுர்தாயை நம :
,, ஸுததாயை நம :
,, ப்ரவாஸரக்ஷிகாயை நம :
,, நகர ரக்ஷிகாயை நம :
,, சங்க்ராம ரக்ஷிகாயை நம :
,, சத்ரு ஸங்கட ரக்ஷிகாயை நம :
,, அடாவீதுர்க காந்தார ரக்ஷிகாயை நம.
,, ஸாகரகிரி ரக்ஷிகாயை நம :
,, ஸர்வகார்ய ஸித்தி ப்ரதாயிகாயை நம :

ஸ்ரீ துர்க்கா லக்ஷ்மி ஸரஸ்வதி நாநாவித பரிமள பத்ர புஷ்பம் ஸமர்ப்பயாமி.

# அபிராமி அந்தாதி போற்றி மாலை

உதிக்கின்ற செங்கதிர் உச்சித் திலகமே போற்றி
உணர்வுடையோர் மதிக்கின்ற மாணிக்கமே
போற்றி
மாதுளமே போற்றி
துதிக்கின்ற மின்கொடியே போற்றி
விதிக்கின்ற மேனி அபிராமி போற்றி
விழுத்துணையே போற்றி
தொழுந்தெய்வமே போற்றி
பெற்றதாயே போற்றி
பதிகொண்ட வேரே போற்றி
திரிபுர சுந்தரியே போற்றி
அறியா மறையே போற்றி
சேவடிக் கோமளமே போற்றி
பொன் திருவடித் தாமரையே போற்றி
மதியுறு வேணி போற்றி
எந்தைத் துணைவியே போற்றி
ஆனந்தமே போற்றி
என் அறிவே போற்றி
நிறைந்த அமுதமே போற்றி
மறை நான்கினுக்கும் வடிவே போற்றி
பூத்தவளே போற்றி
புவனம் பதிநான்கையும் பூத்தவண்ணம்
காப்பவளே போற்றி
கரை கண்டவனுக்கு மூத்தவளே போற்றி
மூவா முகுந்தர்க்கு இளையவளே போற்றி
மா தவத்தவளே போற்றி
கிளியே போற்றி
ஒளியே போற்றி
வெளியே போற்றி
வெளிமுதல் பூதங்களாய் விரிந்த அம்மே போற்றி
அதிசயமான வடிவுடையவளே போற்றி
அரவிந்தமே போற்றி
துதி சயமான சுந்தரி போற்றி
மங்கலை போற்றி
செங்கலசம் முலையாள் போற்றி
மலையாள் போற்றி
வருண சங்கலை போற்றி
செங்கை சகல கலா மயிலே போற்றி
பிங்கலை போற்றி
பசும் பெண் கொடியே போற்றி

பரிமளமே போற்றி
மணியே போற்றி
மணியின் ஒளியே போற்றி
அணியே போற்றி
அணியும் அணிக்கழகே போற்றி
அணுகாதவருக்கு பிணியே போற்றி
பிணிக்கு மருந்தே போற்றி
அமரர் பெரு விருந்தே போற்றி
உலகுக்கு அபிராமியே போற்றி
அருமருந்தே போற்றி
பரிமளப் பூங்கொடியே போற்றி
பராசக்தியே போற்றி
உமையே போற்றி
கோமளமே போற்றி
பொருளே போற்றி
பொருள் முடிக்கும் போகமே போற்றி
அரும் போகம் செய்யும் அருளே போற்றி
இருளின் ஒளியே போற்றி
சுடரே போற்றி
கலைமாமதியே போற்றி
நாயகி போற்றி
நான்மணி போற்றி
நாராயணி போற்றி
கை நளின பஞ்சசாயகி போற்றி
சாம்பவி போற்றி
சங்கரி போற்றி
மாலினி போற்றி
வாராகி போற்றி
சூலினி போற்றி
மாதங்கி போற்றி
பிறப்பிறப்பறுக்கும் தெய்வமே போற்றி
ஒன்றே போற்றி
பலவே போற்றி
அருணம் புயமே போற்றி
என் சித்தாம்புயமே போற்றி
சித்தாம்புயத்து அமர்ந்திருக்கும் தேவியே
போற்றி
கருணம் புயமே போற்றி
பைரவி போற்றி

பஞ்சமி போற்றி
பாசாங்குசை போற்றி
பஞ்ச பாணி போற்றி
வஞ்சர் உயிரவி போற்றி
உண்ணும் உயர் சண்டிகாளி போற்றி
ஒளிரும் கலாவயிரவி போற்றி
மண்டலி போற்றி
சூலி போற்றி
வராகி போற்றி
கனக கலசமே போற்றி
அபிராமி வல்லியே போற்றி
அணங்கே போற்றி
ஆரணங்கே போற்றி
அகிலாண்டமே போற்றி
தையல் நாயகியே போற்றி
கற்பகமே போற்றி
வேதவல்லியே போற்றி
கமலத்திருவே போற்றி
மெல்லிய நுண்ணிடையோளே போற்றி
மின் அணையாளே போற்றி
மென்முலை பொன் அணையாளே போற்றி
மறையே போற்றி
கோமளவல்லியே போற்றி
யாமளவல்லியே போற்றி.
ச்யாமள மேனியே போற்றி
கடம்பவன குயிலே போற்றி
கோல இயல் மயிலே போற்றி
கயிலாயனுக்கு துணையே போற்றி
இமவான் அளித்த கணங்குழையே போற்றி
விண்ணில் ஞான ஒளியே போற்றி
கமலத்தின் மீதன்னமே போற்றி
கொங்கை வல்லியே போற்றி
நெஞ்சில் எப்போதும் உதிக்கின்ற அபிராமி
போற்றி! போற்றி!!

**என பலவிதமான புஷ்பங்களை சமர்ப்பிக்கின்றேன்—**
என்று அர்ச்சிக்கவும்.

---

[இது மாதிரி விரும்புவோர் தங்கள் சௌகர்யப் படி காலையிலோ அல்லது மாலையிலோ அல்லது இருவேளையிலும் செய்ய குடும்பத்திற்கு சுபிட்சம் உண்டாகும்.

உள்ளூர், வெளியூரில் இருக்கும் அன்பர்கள் தங்கள் இல்லத்தில் பூஜை செய்ய இயலாவிடில் வைத்யநாதம் ஜோதிஷ கேந்திரத்தில் ஆசிரியரால் செய்யப்படும் பூஜையில் மேற்கொண்ட பொருட் களுடன் வந்து பங்கு கொள்ளலாம். வரமுடியாத அன்பர்கள் ரூ. 51/- M.O. செய்தால் பூஜை செய்து பிரசாதம் தினமும் அனுப்பி வைக்கப்படும்.]

